# பொதுத் தமிழ்

## அலகு – 2

1. **வெ. இறையன்பு கூறும் சிறந்த போர் முறை எது?**

- சண்டையிடாமல் வெற்றி பெறுவது தான் சிறந்த போர் முறை.
- ஆயுதத்தை பயன்படுத்தாமல் பெறுகிற வெற்றியே உயர்ந்தது.
- சாதனையென்பது காயங்களை ஏற்படுத்துவதில் இல்லை. தாக்கங்களை ஏற்படுத்துவதில் உள்ளது.

2. **பீடர் ஹியூர்க் கோவின் ஆழ் மன அதிசயம் பற்றி உதய மூர்த்தி கூறுவது யாது?**

- பீடர் ஹியூர்க்கோ அமெரிக்காவில் வாழ்கிறார். அமெரிக்காவில், ஐரோப்பாவில் நடந்த பல கொலைகளையும் திருட்டுகளையும் துப்பு துலக்க இவர் பெரிதும் உதவியிருக்கிறார்.
- கண்ணை மூடிக் கொண்டு சில சமயம் ஆழ்ந்து யோசிக்கும் போது, பல நிகழ்ச்சிகள் அவர் கண்முன் தெரிந்தன. அதை அப்படியே விவரிப்பார். இதன் உதவி கொண்டு போலிஸ் குற்றங்களை கண்டு பிடிக்கிறது.
- பயங்கரமான கொலை, கொள்ளை, திருட்டு இவற்றைக் கண்டிபிடிக்க உதவியுள்ளார்.

3. **டார்வின் பரிணாமக் கொள்கையில் சார்ல் வாலஸிக்கும் பங்கு உள்ளது என்பதை சான்றுடன் கூறுக.**

- சார்ல்வாலஸ் என்ற விஞ்ஞானி டார்வின் போல பரிணாமக் கொள்கையைப் பற்றி ஆராய்ந்து வந்தார்.
- ஒரு சமயம் அவர் மருத்துவ மனையில் கடும் சுரம் வந்து படுத்திருந்த போது, பல விஷயங்கள் அவருக்கு புலனாயின. சார்ல் வாலஸ் தன் எண்ணங்களை ஒரு தாளில் எழுதி டார்வினுக்கு அனுப்பினார்.
- டார்வின் அதைப் படித்ததும் அயர்ந்து போய்விட்டார் பல ஆண்டுக் காலமாக உழைத்து தான் உண்டாக்கிய வாழத் தகுதியுள்ளதே வாழ்கிறது என்ற பரிணாமக் கொள்கையைத் தமக்கு முன் சார்லஸ் எழுதியதை ஒப்புக்கொண்டார்.
- டார்வினுடன் வால்ஸ்க்கும் பரிணாமக் கொள்கையில் பங்கு உண்டு என்பதை உலகம் ஏற்றுக் கொண்டது.

4. **போரின்றி வெற்றி எவ்வாறு அமைய வேண்டும் என இறையன்பு கூறுகிறார்? (5)**

**முன்னுரை:**

சண்டையிடாமல் வெற்றி பெறுவதுதான் சிறந்த போர் முறை என்கிறார் இறையன்பு. ஆயுதத்தை பயன்படுத்தாமல் வெற்றி பெற்ற ஒரு துறவியின் கதையின் மூலம் இதை உணர்த்துகிறார்.

**வாலில்லாமல் போர்**

- போகுடென் என்கிற ஜென் துறவி ஒருவர் இருந்தார். ஒரு முறை அவர் இன்னொரு சாமுராயுடன் இருவர் மட்டுமே செல்லும் படகில் பயணம் செய்து கொண்டிருந்த போது அந்த சாமுராய் கேட்டார். 'நீங்கள் எந்த ஜென் பள்ளியைச் சார்ந்தவர்?'
- போகுடன் அதற்கு 'நான் வாள் இல்லாச் சண்டைப் பள்ளியைச் சார்ந்தவன் என்றார்'.
- 'வாளைப் பயன்படுத்தாமல் வெற்றிபெற முடியும் எனக் கருதுகிறீர்களா? என அந்தச் சாமுராய் கேட்டார். ஏன் முடியாது? அப்படியென்றால் நாம் இருவரும் மோதலாமா?



சு.அருண்குமார் எம்.ஏ., எம்.பி.ஏ., பி.எட்., எம்.ஃபில்., நெட். – மரீத் ஹாஜி இஸ்மாயில் சாஹெப் கலை & அறிவியல் கல்லூரி.

கரைக்கு படகை விடுங்கள் என்றார் சாமுராய். அவர் கைகளில் பலவித அளவுகளில் வாட்கள் இருந்தன.

- போகுடென் சொன்னார், 'சற்று தூரமாக ஆள் அரவமற்ற இடத்துக்கு செல்வோம். நம் சண்டையை மற்றவர்கள் வேடிக்கை பார்ப்பதை நான் விரும்பவில்லை.
- தூரமான தீவுப் பகுதிக்குச் சென்றார். சாமுராய் இறங்கி வெகுதூரம் சென்று போருக்கு தயாரானார். போகுடென் அவர் பின்னே வருவது போல பாவனை செய்து படகில் மறுபடியும் ஏறி பலமாக துடுப்பு போட்டு வெகுதூரம் ஆழமான இடத்திற்கு முன்னேறினார். சாமுராய் அந்தத் தீவிலிருந்து எப்படித் திரும்புவது என்ற ஆழமான யோசனையில் ஆழ்ந்தார்.
- அவர் தன்னுடைய வாளையெல்லாம் கடலில் தூக்கியெறிந்தார். அவர் முன் வந்து நின்ற படகில் போகுடென் அவரை மறுபடியும் ஏற்றிக் கொண்டார். அப்போது தான் வாளற்ற பள்ளியின் போர் முறையை அவர் புரிந்து கொண்டார்.

**உண்மையான சாதனை:**

- சாதனை என்பது காயங்களை ஏற்படுத்துவதில் இல்லை தாக்கங்களை ஏற்படுத்துவதில் இருக்கிறது என்கிறார் இறையன்பு.
- வயிறு வரை தாடி வளர்த்தும், முழு நீள நகம் வளர்த்தும் கூடச் சாதனை புரியலாம்.
- அப்படி வளர்ப்பவர்களின் அருகில் வாழ்பவர்களே உண்மையான சாதனையாளர்கள்.
- வெகுநேரம் பேசுபவர்களைக் காட்டிலும் அதைக் கேட்பவர்கள் தான் மகத்தான சாதனை புரிந்தவர்கள்.
- உண்மையான சாதனையாளர்கள் உடலை முறுக்கி சதையைத் திரட்டி எல்லா நேரமும் தங்கள் பலத்தை வெளிப்படுத்திக் கொண்டே இருப்பதில்லை.
- தேவைப்படும் போது மட்டுமே புயலாகவும், சூழல் வரும் போது சூறாவளியாகவும், குளிர்ச்சியைத் தருவதில் தென்றலாகவும், பரிணமிக்கும் முதிர்ச்சி அவர்கள் செயல்களில் உண்டு.

**முடிவுரை:**

சாதனையென்பது புகழில் இல்லை. பொருளில் இல்லை. பெயரில் இல்லை. பெருமையில் இல்லை. நம்மால் முடிந்தவரை மற்றோர் முகத்தில் வற்றாத மகிழ்ச்சியை, குன்றாத வளர்ச்சியைப் பொருத்திப் பார்க்கும் கருணைதானே காலம் கடந்தும் வாழும் வளமான சாதனையாகும் என்கிறார் இறையன்பு.

5. **உள்ளுணர்வு கனவாக வெளிப்படுவதற்கு எம்.எஸ். உதய மூர்த்தி கூறும் சில சான்றுகளைக் கூறுக. (5)**

- அமெரிக்காவில் வாழ்ந்த ரோவே என்பவர் கை கால் முடக்கப் பட்டவர். அவர் மனைவி துணி தைப்பவர்.
- மனைவியின் கஷ்டத்தை போக்குவதற்கு தையல் இயந்திர ஊசியை தயாரிக்க எண்ணினார். ஆனால் இயந்திரத்தில் அப்படிச் செய்வது சாத்தியமில்லை என எண்ணினார்.
- ஒரு நாள் அவர் தூக்கத்தில், அவரை ஆப்பிரிக்க மாமிச பட்சிணிகள் தின்றுவிட தீர்மானித்தன. அப்போது 24மணி நேரத்தில் தையல் இயந்திர ஊசியை கண்டுபிடிக்காவிடியீல உன்னைச் சாப்பிட்டு விடுவோம் என்றன.
- அவர்கள் கையில் ஈட்டி இருந்தது. ஈட்டியின் முனையில் ஓர் ஓட்டை இருந்தது.

- இத்தகைய கனவுடன் அவர் விழித்துக் கொண்டார். ஈட்டி துசி தைக்கும் ஊசியாக விரிந்தது. புதிய தையல் இயந்திர ஊசியைச் செய்தார். அது வேலை செய்தது.
- பீடர் ஹியூரிக்கோ அமெரிக்காவில் வாழ்பவர். அமெரிக்காவில் ஐரோப்பாவில் நடந்த பல கொலைகளையும் திருட்டுகளையும் துப்புத் துலக்க இவர் பெரிதும் உதவியிருக்கிறார்.
- கண்ணை மூடிக் கொண்டு சில சமயம் ஆழ்ந்து யோசிக்கும் போது பல நிகழ்ச்சிகள் அவர் கண்முன் தெரிகின்றன.
- அதை அப்படியே விளக்குவார். இதன் உதவி கொண்டு போலிஸ் குற்றங்களைக் கண்டு பிடிக்கிறது. பயங்கரமான கொலை, கொள்ளை திருட்டு இவற்றைக் கண்டு பிடிக்க இவர் உதவியிருக்கிறார்.
- இவர் பெயிண்டராக வேலை பார்க்கும் போது கீழே விழுந்ததில் மூளையில் நல்ல அடிபட்டது.
- உடல் குணமானவுடன் அவருக்கே பயனளிக்கும் வகையில் பல விஷயங்கள் அவருக்குத் தெரிய ஆரம்பித்தன. இவரது திறன் அதிசயிக்கும் வகையில் இருந்தது.
- ஆழ் மனம் சில சமயம் நமக்கு எதிர்பாராமல் உதவுகிறது என்பதற்கான சான்றுகள் இவை.

6. <u>உ.வே.சாமிநாதய்யர் தமிழுக்கு செய்த தொண்டுகளாக கல்கி கூறுவன யாது?</u>

- டாக்டர் உ.வே.சாமிநாதய்யர் தமிழுக்கு செய்திருக்கும் தொண்டு அளப்பறியது.
- பழந்தமிழ் இலக்கியங்களை கண்டுபிடித்து அச்சேற்றி திருத்தமான உயர்ந்த பதிப்புகளாக வெளியிட்டார்.
- சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, புறநானூறு, பத்துப்பாட்டு என்னும் வெளியிடும் முயற்சியில் உ.வே.சா. அடைந்த சிரமங்கள் எண்ணிலடங்காதவை.
- பல ஓலைச்சுவடிகளை கறையானிடமிருந்து காப்பாற்றி தமிழ் உலகிற்கு தந்தார்.

7. <u>கறையான்களுடன் உ.வே.சா. நடத்திய போர் பற்றி எழுதுக.</u>

- கறையான் படைகளுடன் உ.வே.சா. நடத்திய போரை ஒரு மகாகவி வர்ணிக்க வேண்டுமே தவிர சாதாரண வார்த்தைகளில் எழுத முடியாது என கல்கி, உ.வே.சாவின் முயற்சிகளை பெருமைப் படுத்துகிறார்.
- ரயில் பாதைக்கு வெகு தூரத்தில் உள்ள ஒரு கிராமத்தில் ஏதோ ஒரு வீட்டின் பரணில் ஓலைச் சுவடி உள்ள விபரம் உ.வே.சா.விற்கு எப்படியோ தெரிந்துவிடும்.
- உடனே அக்கிராமத்தை நோக்கி விரைந்து செல்வார். ரயிலோ கட்டை வண்டியோ கால் நடையோ எதுவாயிருந்தாலும் பயணம் செய்து கறையான்களுடன் போர் நடத்தி ஓலைச்சுவடிகளை எடுத்து பாதுகாப்பார்.

8. <u>உ.வே.சாமிநாதய்யரின் சிறப்புகளாக கல்கி குறிப்பிடுவன யாவை?</u>

- ஒருமுறை கல்கி அவர்கள் தமிழ்த் தாத்தா உ.வே.சா.வை பார்க்கச் சென்றார். அப்படிச் செல்லும் போது அவர் நம்மை எப்படி வரவேற்பார் என்ற பயமே மேலோங்கி இருந்தது.
- கல்கி தன்னை உ.வே.சாவிடம் அறிமுகம் செய்து கொள்ளும் போது டி.கே.சிதம்பர முதலியார் உம்மைப் பற்றி சொல்லியிருக்கிறார் எனக் கூறியபோது கல்கி திகைப்பில் ஆழ்ந்தார்.

- சில காலத்திற்கு முன் முதன் முதல் வெளியான தமிழ் பேசும் படத்தைப் பற்றி தமிழ் பாட்டி என்ற கட்டுரையை கல்கி எழுதியிருந்ததையும் அவற்றைப் பற்றிய பாராட்டுதலையும் தெரிவித்தார்.
- மிகப்பெரிய மகானுபவராக இருந்தாலும் வீட்டுத் தமிழிலேயே கல்கியிடம் பேசினார். இவ்வாறு கல்வியில் கரை கண்டவராயிருந்தாலும் மிகவும் எளிமையாக பழகும் குணம் கண்டு கல்கி வியந்தார்.

9. <u>உ.வே.சா. வாழ்வியல் அனுபவம் ஏதேனும் ஒன்றினைக் கூறுக?</u>

- ஒரு சமயம் ரஸிகரான ஒரு ஜமின்தார் முன்னிலையில் ஸ்ரீ சாமி நாதய்யரும் இன்னொரு தமிழ்ப் பண்டிதரும் இருந்தார்களாம்.
- ஜமின்தார் அந்த இன்னொரு தமிழ்ப் பண்டிதரைப் பரிகாசமாகப் புகழ்ந்து சாமிநாதய்யருக்கு என்ன தெரியும்? பழைய ஓலைச் சுவடிகளைப் புரட்டிக் கொண்டிருப்பார். உம்மைப் போல அவருக்கு நிமிடத்திற்கு ஒரு பாட்டுப்பாட முடியுமா? என்றாராம்.
- ஜமின்தார் புகழ்ந்ததை அந்தப் பண்டிதரும் உண்மையென்று நம்பி சந்தோஷப்பட்டார்.
- என்று உ.வே.சா. கூறியவுடன் கல்கி, தாங்கள் கூட சிறிது நேரம் ஊக்கப்படுத்துவதற்காகத் தாங்கள் சொன்னதை எல்லாம் நான் அப்படியே நிஜமென்று எடுத்துக்கொள்ளலாமா? என்று கூறியதைக் கேட்டு , தமிழ்த் தாத்தா மிகவும் சிரித்து மகிழ்ந்தார் என கல்கி தன் வாழ்வில் உ.வே.சா. உடன் நடந்த சம்பவங்களை நினைவு கூறுகின்றார்.

10. <u>உ.வே.சா. தன் அனுபவங்களை சுயசரிதையாக எழுத வேண்டும் என்ற ஆசை கல்கிக்கு தோன்றியதன் காரணம் என்ன?</u>

- ஒரு சமயம் ஆண்டு மலரில் பரம்பரைக் குணம் என்னும் தலைப்புடன் உண்மையாக நடந்த ஒன்றை எளிய பேச்சு நடையில் எழுதியிருந்தார்.
- அதைப் படித்தவுடன் பண்டித உலகில் இவ்வளவு உயர்ந்த இடத்தை வகிப்பவர் எளிய நடையில் எழுதக் கூடும் என்று கல்கி எண்ணவில்லை. அதி முதல் டி.கே.சியுடன் தமிழ்த் தாத்தாவை அடிக்கடி பார்க்கப் போவதுண்டு.
- அப்போதெல்லாம் அப்பெரியாரின் வாழ்க்கை அனுபவங்களை கேட்கும் வாய்ப்பு கல்கிக்கு கிடைத்தது.
- இவ்வனுபவங்களையெல்லாம் அவர் புத்தகமாக எழுத வேண்டும் என்ற ஆசை கல்கிக்கு உண்டாயிற்று.

11. <u>வெ.இறையன்புவின் தன்னம்பிக்கை வாசகங்கள் சிலவற்றை எழுதுக.</u>

- சண்டையிடாமல் வெற்றி பெறுவது தான் சிறந்த போர் முறை.
- ஆதிக்கம் செலுத்தாமல் நடத்திக் காட்டுவதே சிறந்த நிர்வாகம்.
- கோபப்படாமலேயே பலருக்குள் பாதிப்பை ஏற்படுத்துவதே சிறந்த தலைமை.
- பேசாமலேயே புரிய வைப்பதே சிறந்த மொழியாளுமை.
- ஆயுதத்தை பயன்படுத்தாமல் பெறுகிற வெற்றியே உயர்ந்தது.
- சாதனையென்பது காயங்களை ஏற்படுத்துவதில் இல்லை.
- தாக்கங்களை ஏற்படுத்துவதில் உள்ளது.

12. <u>உண்மையான சாதனையாளர்கள் யார்? என இறையன்பு கூறுகிறார்?</u>

- வயிறு வரை தாடி வளர்ப்பவர்களும், முழு நீள நகம் வளர்ப்பதும் சாதனையல்ல அப்படி வளர்ப்பவர்கள் அருகில் வாழ்பவர்களே உண்மையான சாதனையாளர்கள்.
- வெகு நேரம் பேசுபவர்களைக் காட்டிலும் அதைக் கேட்பவர்கள் தான் மகத்தான சாதனை புரிந்தவர்கள்.
- நம்மால் முடிந்த வரை மற்றோர் முகத்தில் வற்றாத மகிழ்ச்சியை குன்றாத வளர்ச்சியை பொருத்திப்பார்க்கும் கருணையே காலம் கடந்தும் வாழும் வளமான சாதனை என்கிறார். இறையன்பு.

13. <u>டி.என். சுகி சுப்பிரமணியனின் வானொலி பணிகளை எழுதுக.</u>

- டி.என். சுகி சுப்பிரமணியம் அவர்கள் 22.03.1917 இல் திருநெல்வேலியில் பிறந்தவர்.
- 1940ஆம் ஆண்டு வரை திருச்சி வானொலியில் எழுத்தாளராகப் பணிபுரிந்தார்.
- 1959 முதல் சென்னை வானொலி நாடக அமைப்பாளராக செயல்பட்டார்.
- வானொலியில் 40 வாரங்களுக்கும் அதிகமான தொடர்களாக துபாஷ் வீடு, காப்புக் கட்டிச் சத்திரம், ஜனதா நகர் போன்ற தொடர் நாடகங்களைத் தயாரித்து ஒலிபரப்புச் கலைக்கு விறுவிறுப்பைத் தந்தவர்.
- வானொலி நாடக வளரச்சிக்கும் தரத்துக்கும் தனிச் சிறப்பையும் பெருமையையும் சேர்த்தவர்.

14. <u>ரகுநாத தொண்டைமான் செய்த சூழ்ச்சி யாது?</u>

- தொண்டைமான் கும்பெனியாரின் சொல் கேட்டு அரசாளும் ஆசையில் கட்டபொம்மனையும் ஊமைத்துரையையும் பிடித்துக் கொடுக்க சூழ்ச்சி செய்தான்.
- கட்டபொம்மனும் ஊமைத்துரையும் கும்பெனியாருக்கு எதிராக போர் தொடுத்து தலைமறைவாக வாழ்ந்து வந்தனர்.
- அவர்களுக்கு அடைக்கலம் தருவதாக வஞ்சகச் சொல் கூறி விருந்தினர் போல் வரவேற்று தன் அரண்மனையிலேயே அடைத்து வைக்க சூழ்ச்சி செய்தான்.

15. <u>தொண்டைமானுக்கு கும்பெனி கலெக்டர் விடுத்த வேண்டுகோள் என்ன?</u>

- ‘விஜயரகுநாத தொண்டைமான் அரசே’ பலமற்றுப் போன பாஞ்சாலங் குறிச்சி கட்டபொம்மன் என்ற துரோகி தலைமறைவாகத் திரிகிறான்.
- அவனைத தேடப் பாளையக்காரர்கள் பலரும் முயற்சி செய்கிறார்கள்.
- தாங்கள் நினைத்தால் முடியாதது இல்லை. வெற்றிக்கு தங்கள் துணையை பெரிதும் விரும்புகிறேன்.
- இதனால் கும்பெனியர் ஆட்சிக்கும் தங்களுக்கும் நன்மை நடக்கும் என ஓலை ஒன்றை தொண்டைமானுக்கு கலெக்டர் அனுப்பினார். இதன் மூலம் தன் வேண்டுகோளை எடுத்துரைத்தார்.

16. <u>ஊமைத்துரையின் வீரம் குறித்து எழுதுக.</u>

- கட்டபொம்மனும் ஊமைத்துரையும் ஓய்வாக இருக்கும் நேரத்தில் வீரர்களில் ஒருவன் ஊமைத்துரையின் மூக்கின் நேராக கையை வைக்கின்றான்.
- அப்போது ஊமைத்துரையின் கரங்கள் சாடிப்பிடித்து வீரனைத் தூக்கி எறிகின்றன.
- வீரன் அலறும்போது, கத்தாதே! யார் செய்த சூழ்ச்சி இது என கேட்கிறான் பாஞ்சாலங் குறிச்சியின் வீரத்தைப் பரிசோதனை செய்ய வந்த பதரே, தூக்கத்திலும் விழிப்போடு

இருக்கும் எம்மை எவரும் நெருங்க முடியாது என தன் வீரத்தை வெளிப்படுத்துகிறான் ஊமைத்துரை.

17. <u>தொண்டைமானின் துரோகம் குறித்து ஊமைத்துரை வெகுண்டு கூறியது என்ன?</u>

- உண்டி கொடுத்து உறக்கம் கொள்ளும் போது உயிரைப் பறிக்கத் திட்டம் தீட்டிவிட்டனர்.
- விருந்து கொடுத்து விழிமூடும் போது வெட்டிச் சாய்க்கும் திட்டம் போட்டுவிட்டார்கள். புதுக்கோட்டை அரசின் துரோகப் படலம் நடந்தது.
- நாட்டுத் துரோகியின் நயவஞ்சகம் நடந்தது. நம்பிக்கையால் அழிந்து போனது தமிழகம். நன்றியைப் கடைப்பிடிப்பதால் அழிந்து போகிறது தமிழகம்.
- இவ்வாறு ஊமைத்துரை நாம் துரோகத்தால் மாளப்போகிறோம் என வெகுண்டு எழுந்த கோபத்தை கட்டபொம்மனிடம் காட்டினான்.

18. <u>கட்டபோம்மனின் புண்பு நலன்கள் யாது?</u>

- ஊமைத்துரை தொண்டைமான் செய்த துரோகத்தைப் பற்றி கோபமாக பேசினான். அப்போது கட்டபொம்மன், ‘தொண்டைமான் கும்பெனியார் அல்லர், நமது அண்ணன் தம்பி போன்றவர்கள்.
- சந்தர்பத்தால் இவர்கள் பாவம் செய்தவர்கள். எனவே உன் கோபத்தையும் பலத்தையும் தொண்டைமானிடம் காட்டாதே’ என ஊமைத்துரையிடம் கூறினார்.
- வீரத்தை விட கொடை பெரிது. வீரத்தை விடப் பெரிது தியாகம் எனக் கூறி ராணியின் மாங்கல்யத்திற்கு காவல் நின்றான் கட்டபொம்மன்.

19. <u>ராணி கட்டபொம்மனுக்கு அனுப்பிய காணிக்கை யாது? அதற்கு கட்டபொம்மனின் பதில் என்ன?</u>

- ராணியார் தன் தோழியின் மூலமாக கட்டபொம்மனுக்கு மாங்கல்யத்தை காணிக்கையாக அனுப்பினார்.
- அப்போது கட்டபொம்மன், ராணியின் பொற்றாலிக்கு என்னாலோ என் தம்பியாலோ ஆபத்து ஒன்றும் இல்லை.
- நாங்கள் அக்கிரமக்காரர்கள் இல்லை அயோக்கியவர் அல்லர். வாக்கு ஒன்று தான் உண்ட வீட்டில் துரோகம் செய்ய மாட்டோம் என கட்டப்பொம்மன் பதிலுரைத்தான்.

20. <u>ராணியார் தொண்டைமானிடம் கேட்ட வாக்குறுதி என்ன?</u>

- ராணியார் அரசரிடம், தனக்கு கட்டபொம்மன் மாங்கல்யப் பிச்சை கொடுத்ததால் தான் நீங்கள் ஊமைத்துரையிடம் இருந்து தப்பித்தீர்கள்.
- உங்கள் வீரர்கள் அவர்களைப் பிடிக்கவில்லை. அவர்களாகவே அகப்பட்டுக் கொண்டனர். எனக்கு உயிர் பிச்சை தந்த அவர்களை சிறை பிடிக்காமல் பாதுகாப்பாக அனுப்பி வைக்கும் படி அரசனிடம் ராணியார் வாக்குறுதி கேட்டார்.
- நமது மண் மேல் அவர்கள் பிடிபடக் கூடாது என அரசனிடம் ராணி மன்றாடினார்.

21. <u>ஆழ்மனம் பிரச்சனைகளைக் தீர்க்க எவ்வாறு உதவுகிறது.</u>

- சகஜமான நினைவு மனத்தில் ஒரு பிரச்சனையை ஆராய்வதன் மூலம் நமக்கு ஆழ்மனம் வழிகாட்டி உதவுகிறது.
- சில சிக்கலான பிரச்சனைகள் தோன்றும் போது அதைப் பல வழிகளிலும் அலசுங்கள் தீவிரமாக எண்ணிவிட்டுப் பின் விட்டுவிட வேண்டும்.

- அதை மறந்து விட்டு வேறு வேலையில் மனத்தை ஈடுபடுத்த வேண்டும். மனம் தானாகத் திடிரென்று வழிகாட்டும் என மனோதத்துவ அறிஞர்கள் கூறுகிறார்கள்.
- நிகழப்போகும் நிகழ்ச்சிகள் எப்படி இருக்கும் என்று மனத்தில் ஓர் எதிர்பாக்கும் பழக்கத்தை ஏற்படுத்தினால், ஆழ்மனம் நமக்கு உதவும் என்கிறார்கள் அறிஞர்கள்.

22. <u>ஆழ் மனத்தை பயன்படுத்தும் விதம் குறித்து எம்.எஸ். உதயமூர்த்தி கூறுவன யாவை?</u>

- அழ்மனம் சில சமயம் நமக்கு எதிர்பாராமல் உதவுகிறது. சில சமயம் கனவில் வெளிப்படுகிறது. ஞானிகளுக்கோ எல்லாச் சமயங்களிலும் இது உதவுகிறது. மனித மூளையில் சில மாற்றங்களை ஏற்படுத்துவதன் மூலம் சாதாரண மனிதர்கள் கூட இதைப் பெற முடியும் என்கிறார்.
- வாழ்வில் சில சிக்கலான பிரச்சனைகள் தோன்றும் போது அதைப் பல வழிகளிலும் அலச வேண்டும். தீவிரமாக அதைப்பற்றி எண்ணி விட்டு பின் விட்டுவிட வேண்டும்.
- அதை மறந்து வேறு வேலையில் மனத்தை ஈடுபடுத்த வேண்டும். மனம் தானாகத் திடீரென்று வழி காட்டும் என்கிறார் மனோதத்தவ அறிஞர்கள்.
- நமது தினப்படி வாழ்வில் நாம் நமது ஆழ்மனத்தை உபயோகிக்கச் சில பயிற்சியை மேற்கொள்ளலாம். அதாவது பாலையோ அரிசியையோ அளக்கும் போது ஒரு குத்து மதிப்பாக நம்பி அளந்து பழகுங்கள். டெலி போல் மணி அடித்தால் யார் கூப்பிடுவார்கள் என்று எண்ணி எதிர் பார்த்து போய் எடுங்கள். இன்று இன்னாரிடமிருந்து கடிதம் வந்திருக்கும் என்று எண்ணித் தபால்காரரிடமிருந்து கடிதத்தை பெறுங்கள். என்று யோசனை கூறுகிறார்கள் சில ஆசிரியர்கள்.
- நிகழப் போகும் நிகழ்ச்சிகள் எப்படி இருக்கும் என்று மனத்தில் ஓர் எதிர்பார்க்கும் பழக்கத்தை ஏற்படுத்துங்கள். உங்கள் ஆழ்மனம் உங்களுக்கு உதவும் என்கிறார்கள் அறிஞர்கள்.

23. <u>உ.வே.சா. தமிழ்ச் சுவடிகளைத் தேடிப் போன பயணங்களை கல்கி எவ்விதம் கூறுகிறார்?</u>

- உ.வே.சா. பழந்தமிழ் இலக்கியங்களை கண்டுபிடித்து அச்சேற்றித் திருத்தமான உயர்ந்த பதிப்புகளாக வெளியிட்டார். நூல்களை கண்டுபிடித்து வெளியிடும் முயற்சியில் அவர் அடைந்த சிரமங்களுக்கு அளவே இல்லை
- அவருக்கு ஏற்பட்ட பலவித எதிர்ப்புகளில் முக்கியமானது கரையான்கள். கரையான் அவர் நடத்திய போரை ஒரு மகா கவியால் மட்டுமே வர்ணிக்க முடியும் என்கிறார் கல்கி.
- ரயிர் பாதைக்கு வெகு தூரத்தில் உள்ள ஒரு கிராமத்தில் ஏதோ ஒரு வீட்டின் பரணில் ஓலைச் சுவடி கிடைக்கும். இதை ஆகாரமாக உட் கொண்டு விடுவதென்ற தீர்மானத்துடன் கரையான் படைகள் முன்னேறி வந்து கொண்டிருக்கும். அவர் மேற்படி கிராமத்தை நோக்கி விரைந்து செல்வார்.
- ரயிலோ கட்டை வண்டியோ கால்நடையோ எதுவாயிருந்தாலும் அவருக்கு லட்சியமில்லை. பகல் இராத்திரி பாராமல் ஓடிப் போய் சுவடியைத் தேடுவார்.
- இவ்வாறு ஒரு சமயம் சுவடி இருந்த வீட்டை தேடி வந்து சேர்கிறார் உ.வே.சா. வீட்டு எஜமானைப் பார்த்து, 'ஐயா உங்கள் வீட்டில் பழைய ஓலைச் சுவடி ஒன்று இருக்கிறதாமே? என்று கேட்கிறார்.
- பரண் மேல் கிடந்தது என்னத்துக்கு கேட்கிறீர்கள்? என்கிறார் வீட்டுக்காரர். அவரிடம் சாமிநாதய்யர் பழந்தமிழ் இலக்கியங்களின் பெருமையைச் சொல்லி ஓலைச் சுவடியைப் பார்க்க அனுமதி வாங்குகிறார்.

- உ.வே.சா. அவர்கள் மிகவும் பாடுபட்டு பல ஓலைச்சுவடிகளை அச்சேற்றினார்.

24. <u>கல்கி தன் வாழ்வில் உ.வே.சா.வை சந்தித்த அனுபவங்களை எழுதுக.</u>

- கல்கி முதன் முறையாக உ.வே.சா.வை ஒரு விசேஷ ஆண்டு மலருக்கு கட்டுரை கேட்கும் நோக்கமாக சந்தித்தார். அப்போது கல்கிக்கு கொஞ்சம் பயம் கலந்த பதட்டம் இருந்தது. ஏனெனில் பழந் தமிழ் பண்டிதர் தம்மை எப்படி நடத்துவாரோ என்று எண்ணினார்.
- தமிழ் தாத்தா அவர் பயந்தது போல் இல்லாமல் நம்மை போல் அவரிடம் வீட்டுத் தமிழிலேயே பேசினார்.
- கல்கி அவரை அறிமுகப் படுத்திக் கொண்டதும், டி.கே.சிதம்பர முதலியார் உம்மைப் பற்றி சொல்லியிருக்கிறார் என்றார் உ.வே.சா.
- தமிழ்த் தாத்தா மேலும் கல்கியிடம் ஒரு விஷயம் கூறினார். சில காலத்துக்கு முன் வெளியான முதல் தமிழ் பேசும் படத்தைப் பற்றி, தமிழ் பாட்டி என்ற தலைப்பில் கல்கி கட்டுரை ஒன்றை எழுதியிருந்தார் அக்கட்டுரையையும், தப்பிலிகள் என்ற கதையொன்றைப் பற்றியும், தமிழ்த் தாத்தா தனது பாராட்டுதலை தெரிவித்தார். இதைக் கேட்டதும் கல்கி திகைப்பில் ஆழ்ந்தார்.
- இவ்வாறு உ.வே.சா. வுடனான கல்கியின் சந்திப்பு நிகழ்ந்தது. இதற்க்குப்பின் பல முறை கல்கி உ.வே.சாவை சந்தித்தார். அப்போது அவர் பேசும் பேச்சுக்கள் மிகவும் ரஸமாயிருந்தன, உணர்ச்சியுடன் நகைச்சுவை பொருந்தியும் இருந்தன எனக் கல்கி குறிப்பிடுகின்றார்.

25. <u>தமிழ்த் தாத்தா வாழ்வில் நடந்த சுவையான சம்பவங்கள் சிலவற்றைக் கூறுக.</u>

- உ.வே.சா. அவர்களை பார்க்க ஒருவர் வந்து இருந்தார். அவர் மற்றவர்களைப் புத்தகம் எழுதச் சொல்லி தம் பெயரால் வெளியிடும் மகானுபவர் ஆவார். அவர் அந்த அறையில் இருந்த ஓலைச் சுவடிகளை எடுத்துப் பார்க்க ஆரம்பித்தாராம்.
- உடனே ஐயர்வாள "இதோ பாரும் நீர் என்னைப் பார்க்கத்தானே வந்ததாகச் சொன்னீர்? என்னைப் பார்க்க வந்தால் என்னைப் பார்த்துப் பேசும். இல்லாவிட்டால் நடையைக் கட்டும். அங்கே இங்கே பார்த்து விழிக்க வேண்டாம்" என்றாராம்.
- இது போன்று இன்னொரு சம்பவமும் நடந்தது. ஒரு சமயம் ரஸிகரான ஒரு ஜமின்தார் முன்னிலையில் உ.வே.சா.வும் இன்னொறு தமிழ்ப் பண்டிதரும் இருந்தார்களாம்.
- ஜமின்தார் அந்த இன்னொரு தமிழ்ப் பண்டிதரைப் பரிகாசமாகப் புகழ்ந்து, சாமிநாதய்யருக்கு என்ன தெரியும்? பழைய ஓலைச் சுவடிகளைப் புரட்டிக் கொண்டிருப்பார் என்றாராம்.
- இப்புகழ்ச்சியை அந்தப் பண்டிதர் உண்மையென்றே நினைத்துக் கொண்டு தம் மார்பைப் பார்த்துக் கொண்டு சந்தோஷப் பட்டார்.
- இதை உ.வே.சா. கூறியவுடன் கல்கி, தாங்கள் கூட கொஞ்சம் நேரத்திற்கு முன்னால் என்னுடைய எழுத்துத் திறமையை பாராட்டினீர்கள். சிறு பிள்ளையாச்சே என்று ஊக்கப்படுத்துவதற்காகத் தாங்கள் சொன்னதையெல்லாம் நிஜமென்று எடுத்துக் கொள்ளலாமா எனக் கல்கி கேட்டவுடன், உ.வே.சா. குபீர் என்று சிரித்தார்.
- இது போன்ற பல சம்பவங்களை கல்கி சுவையாக தன் கட்டுரையில் கூறுகிறார்.

26. <u>உ.வே.சாமிநாதய்யரை சுயசரிதை எழுத வைக்கும் கல்கியின் மனோரதம் எவ்வாறு நிறைவேறியது?</u>

- உ.வே.சா.வின் பரம்பரைக் குணம் என்னும் கட்டுரையை கல்கி வாசித்தார். அதில் உண்மையாக நடந்த சம்பவம் ஒன்றை எளிய பேச்சு நடையில் மிக ரஸமாக எழுதியிருந்தார். இவ்வளவு எளிய நடையில் எழுதும் துணிச்சல் உ.வே.சா.வுக்கு இருக்கும் என்பதை கல்கி அறிந்தார்.
- உ.வே.சாவை கல்கி சந்தித்த தருணங்களில் எல்லாம் அப் பெரியாரின் வாழ்க்கை அனுபவங்களை வாய்மொழியாக கேட்டார். அந்த அனுபவங்களையெல்லாம் அவர் புத்தகமாக எழுத வேண்டும் என்ற ஆசை கல்கிக்கு உண்டாயிற்று.
- உ.வே.சா.விடம் சுய சரித்திரத்தை எழுத வேண்டும் என்று அடிக்கடி தெரிவித்துக் கொண்டார். மகாத்மா, நேரு முதலியவர்கள் சுய சரிதம் எழுதியிருப்பதை எடுத்துக் கூறினார்.
- ஆனால் உ.வே.சா. என் சரித்திரத்தை நானே எழுதுவது எனக்கு பிடிக்கவில்லை என்றார். தங்களுடைய சுய சரித்திரம் என்றால் அது தமிழ்நாட்டின் எண்பது(80) வருஷத்து சரித்திரமாக இருக்கும் என்று வற்புறுத்தினார்.
- தமிழ் ஆர்வலர்களின் வேண்டுகோளை அவருடைய தலை சிறந்த சிஷ்யரான ஸ்ரீ.கி.வா.ஜகநாதய்யரும் அருமைப் புதல்வர் ஸ்ரீ கல்யாண சுந்தரமய்யரும் ஆதரித்தபடியால் கடைசியில் கல்கியின் மனோரதம் நிறைவேறியது.
- தமிழ்த் தாத்தா தமது சுயசரிதத்தை எழுத சம்மதித்து எழுதினார். ஆனால் அது பூர்த்தியாவதற்குள் அவர் காலஞ்சென்றார்.

27. <u>மாங்கல்யப் பிச்சையில் ஊமைத்துரையின் பண்பு நலன்களை எழுதுக.</u>

- மாங்கல்யப்பிச்சை நாடகம் தொண்டைமான் அதிகார ஆசையில் கட்டபொம்மனையும், ஊமைத்துறையையும் கும்பெனியாரிடம் வஞ்சகமாக ஒப்படைத்த வரலாற்றை எடுத்துக் கூறுகிறது.
- ஊமைத்துரை கட்டபொம்மனின் சகோதரன் ஆவான். தொண்டைமான் கட்டபொம்மன் ஊமைத்துரை இருவரும் தலை மறைவாக வாழ்ந்து வருவதை அறிந்து விருந்து கொடுத்து அடைக்கலம் தருவதாய் கூறி அரண்மனைக்கு அழைக்கிறான்.
- தொண்டைமானின் விருந்தை உண்ட பின் கட்டபொம்மனுடன் அறையில் ஓய்வெடுக்கும் போது ஊமைத்துரை மூக்கின் மேல் வீரன் ஒருவன் கைவைக்கும் போது ஊமைத்துரையின் கரங்கள் சாடிப் பிடித்து வீரனைத் தூக்கி எறிகின்றன.
- தூக்கத்திலும் விழிப்புடனே இருக்கும் ஊமைத்துரையின் சாதுர்யம் இதில் வெளிப்படுகிறது.
- உண்டி கொடுத்து உறக்கம் கொள்ளும் போது உயிரைப் பறிக்கும் திட்டம் தீட்டிவிட்டார் தொண்டைமான் என அறிந்தான் ஊமைத்துரை.
- கட்டபொம்மனிடம், விருந்து கொடுத்து விழி மூடும் போது வெட்டிச் சாய்க்கத் திட்டம் தீட்டி விட்டார்கள்.
- அண்ணா நான் விழித்திருந்ததால் நாம் பிழைத்தோம் என்று கூறுவதில் இருந்து ஊமைத்துரையின் சூழ்ச்சி அறியும் திறன் வெளிப்படுகிறது.

- கட்டபொம்மன் உண்டி கொடுத்தோரை வஞ்சிக்காதே என்றான். அதற்கு ஊமைத்துரை நம்பிக்கையால் அழிந்து போனது தமிழகம். நன்றியைக் கடைபிடிப்பதால் அழிந்து போகிறது தமிழகம்.
- இன்னுமா புல்லுருவிகளிடம் நம்பிக்கை வைக்கச் சொல்லுகிறீர்கள் எனக் கூறுகிறான்.
- தமிழக அரசரகளிடம் ஒற்றுமை இல்லாத காரணத்தாலேயே கும்பெனியர்கள் பெறுகிறார்கள்.
- நாம் ஒர் அன்னை வயிற்றில் பிறந்து ஒருவருக்கொருவர் துரோகம் செய்தாலேயே நாம் அடிமைப்பட்டு கிடக்கின்றோம் எனத் தாய் நாட்டின் பற்றை வெளிப்படுத்துகிறான் ஊமைத்துரை.

28. <u>வீரத்தை விட கொடை பெரிது என்பதை கட்டபொம்மனின் செயல் வெளிப்படுத்தும் விதம் குறித்து எழுதுக.</u>

- கட்டபொம்மன் வீரனாயிருந்தாலும் நம் பண்பாட்டையும் பெண்களையும் பாதுகாப்பவனாக விளங்கினான்.
- தொண்டை மானின் அரசி தன் தோழியின் மூலம் தன் மாங்கல்யத்தை பரிசாக கட்டபொம்மனுக்கு அனுப்புகிறாள். ஊமைத்துரை தொண்டைமானை கொல்லப் போவதாக சூளுரை செய்ததை கேட்டு அஞ்சிய ராணி இச்செயலை செய்கிறாள்.
- கட்டபொம்மன், ராணியின் பொன் தாலிக்கு என்னாலோ என் தம்பியாலோ ஆபத்து ஒன்றும் இல்லை. நாங்கள் அக்கிரமக்காரர்கள் அல்லர். உண்ட வீட்டிற்கு என்றுமே துரோகம் செய்ய மாட்டோம் எனக் கூறி தோழியை அனுப்புகிறாள். இதிலிருந்து கட்டபொம்மனின் நல் மனம் புலனாகிறது.
- ஊமைத்துரை தன் அண்ணனிடம் தொண்டைமானின் உயிரை எடுக்க உத்தரவு வாங்க வருகிறான். அப்போது கட்டபொம்மன் என் சகோதரியின் மாங்கல்யமாக இதை எண்ணுகிறேன். பெண் அபலை என்னிடம் அபயம் வேண்டினாள். நான் அபயம் கொடுக்க வேண்டும் இது பாண்டி நாட்டுப் பண்பு ஆகும். உன்னுடைய உடைவாளை இடுப்பிலே செருகு என ஊமைத்துரையை சமாதானம் செய்கிறார்.
- ஊமைத்துரை தன்னுடைய சபதம் வீணாக வேண்டுமா எனக் கேட்டபோது, கட்டபொம்மன் தம்பி நான் பெண்ணுக்கு என்றுமே எதிரிகள் அல்லர். அன்பின் அடிமைகள். நாம் நம்பிக்கை துரோகம் செய்தல் கூடாது. பெண்ணின் தெய்வம் அவர் கணவன் மட்டுமே. நீ கொல்லத் துடிப்பது விரோதியை அல்ல. ராணியாரின் தெய்வத்தை எனக் கட்டபொம்மன் கூறுகிறான்.
- வீரத்தை விடப் பெரிது கொடை. விரத்தஃ விட பெரிது தியாகம் தம்பி, நிமிர்ந்து நில் நம் பண்பு வெல்லட்டும் எனக் கூறி கட்டபொம்மன் ஊமைத்துரையுடன் வீரர்களிடம் சரணடைகின்றனர்.

29. <u>உ.வே. சாமிநாதய்யர் தமிழ் மொழிக்குச் செய்த அரும்பணிகளை விளக்குக. (10)</u>

<u>முன்னுரை:</u>

- உ.வே.சா. பழந்தமிழ் இலக்கியங்களை கண்டுபிடித்து அச்சேற்றித் திருத்தமான உயர்ந்த பதிப்புகளாக வெளியிட்டார். நூல்களை கண்டுபிடித்து வெளியிடும் முயற்சியில் அவர் அடைந்த சிரமங்களுக்கு அளவே இல்லை

- அவருக்கு ஏற்பட்ட பலவித எதிர்ப்புகளில் முக்கியமானது கரையான்கள். கரையான் அவர் நடத்திய போரை ஒரு மகா கவியால் மட்டுமே வர்ணிக்க முடியும் என்கிறார் கல்கி.

**சுவடி பயணம்:**

- ரயிர் பாதைக்கு வெகு தூரத்தில் உள்ள ஒரு கிராமத்தில் ஏதோ ஒரு வீட்டின் பரணில் ஓலைச் சுவடி கிடைக்கும். இதை ஆகாரமாக உட் கொண்டு விடுவதென்ற தீர்மானத்துடன் கரையான் படைகள் முன்னேறி வந்து கொண்டிருக்கும். அவர் மேற்படி கிராமத்தை நோக்கி விரைந்து செல்வார்.
- ரயிலோ கட்டை வண்டியோ கால்நடையோ எதுவாயிருந்தாலும் அவருக்கு லட்சியமில்லை. பகல் இராத்திரி பாராமல் ஓடிப் போய் சுவடியைத் தேடுவார்.
- இவ்வாறு ஒரு சமயம் கவடி இருந்த வீட்டை தேடி வந்து சேர்கிறார் உ.வே.சா. வீட்டு எஜமானைப் பார்த்து, ‘ஐயா உங்கள் வீட்டில் பழைய ஓலைச் சுவடி ஒன்று இருக்கிறதாமே? என்று கேட்கிறார்.
- பரண் மேல் கிடந்தது என்னத்துக்கு கேட்கிறீர்கள்? என்கிறார் வீட்டுக்காரர். அவரிடம் சாமிநாதய்யர் பழந்தமிழ் இலக்கியங்களின் பெருமையைச் சொல்லி ஓலைச் சுவடியைப் பார்க்க அனுமதி வாங்குகிறார்.
- உ.வே.சா. அவர்கள் மிகவும் பாடுபட்டு பல ஓலைச்சுவடிகளை அச்சேற்றினார்.

**பண்புகள்:**

- கல்கி முதன் முறையாக உ.வே.சா.வை ஒரு விசேஷ ஆண்டு மலருக்கு கட்டுரை கேட்கும் நோக்கமாக சந்தித்தார். அப்போது கல்கிக்கு கொஞ்சம் பயம் கலந்த பதட்டம் இருந்தது. ஏனெனில் பழந் தமிழ் பண்டிதர் தம்மை எப்படி நடத்துவாரோ என்று எண்ணினார்.
- தமிழ் தாத்தா அவர் பயந்தது போல் இல்லாமல் நம்மை போல் அவரிடம் வீட்டுத் தமிழிலேயே பேசினார்.
- கல்கி அவரை அறிமுகப் படுத்திக் கொண்டதும், டி.கே.சிதம்பர முதலியார் உம்மைப் பற்றி சொல்லியிருக்கிறார் என்றார் உ.வே.சா.
- தமிழ்த் தாத்தா மேலும் கல்கியிடம் ஒரு விஷயம் கூறினார். சில காலத்துக்கு முன் வெளியான முதல் தமிழ் பேசும் படத்தைப் பற்றி, தமிழ் பாட்டி என்ற தலைப்பில் கல்கி கட்டுரை ஒன்றை எழுதியிருந்தார் அக்கட்டுரையையும், தப்பிலிகள் என்ற கதையொன்றைப் பற்றியும், தமிழ்த் தாத்தா தனது பாராட்டுதலை தெரிவித்தார். இதைக் கேட்டதும் கல்கி திகைப்பில் ஆழ்ந்தார்.
- உ.வே.சா அவர்கள் பெரிய பண்டிதராய் இருப்பினும் மற்றவரின் திறமையை மனம் திறந்து பாராட்டும் பண்பைப் பெற்றிருந்தார்.

**மற்றொரு சம்பவம்:**

- உ.வே.சா. அவர்களை பார்க்க ஒருவர் வந்து இருந்தார். அவர் மற்றவர்களைப் புத்தகம் எழுதச் சொல்லி தம் பெயரால் வெளியிடும் மகானுபவர் ஆவார். அவர் அந்த அறையில் இருந்த ஓலைச் சுவடிகளை எடுத்துப் பார்க்க ஆரம்பித்தாராம்.
- உடனே ஐயர்வாள “இதோ பாரும் நீர் என்னைப் பார்க்கத்தானே வந்ததாகச் சொன்னீர்? என்னைப் பார்க்க வந்தால் என்னைப் பார்த்துப் பேசும். இல்லாவிட்டால் நடையைக் கட்டும். அங்கே இங்கே பார்த்து விழிக்க வேண்டாம்” என்றாராம்.



சு.அருண்குமார் எம்.ஏ., எம்.பி.ஏ., பி.எட்., எம்.ஃபில்., நெட். – மரீத் ஹாஜி இஸ்மாயில் சாஹெப் கலை & அறிவியல் கல்லூரி.

- உ.வே.சா. தன் மனதில் தவறு என எண்ணியதை உடனே அவரிடம் சொல்லும் மனப் பாங்கினைக் கொண்டிருந்தார்.

**சுயசரிதை:**

- உ.வே.சா.வின் பரம்பரைக் குணம் என்னும் கட்டுரையை கல்கி வாசித்தார். அதில் உண்மையாக நடந்த சம்பவம் ஒன்றை எளிய பேச்சு நடையில் மிக ரஸமாக எழுதியிருந்தார். இவ்வளவு எளிய நடையில் எழுதும் துணிச்சல் உ.வே.சா.வுக்கு இருக்கும் என்பதை கல்கி அறிந்தார்.
- உ.வே.சாவை கல்கி சந்தித்த தருணங்களில் எல்லாம் அப் பெரியாரின் வாழ்க்கை அனுபவங்களை வாய்மொழியாக கேட்டார். அந்த அனுபவங்களையெல்லாம் அவர் புத்தகமாக எழுத வேண்டும் என்ற ஆசை கல்கிக்கு உண்டாயிற்று.
- தமிழ் ஆர்வலர்களின் வேண்டுகோளை அவருடைய தலை சிறந்த சிஷ்யரான ஸ்ரீ.கி.வா.ஜகநாதய்யரும் அருமைப் புதல்வர் ஸ்ரீ கல்யாண சுந்தரமய்யரும் ஆதரித்தபடியால் கடைசியில் உ.வே.சா. சுயசரிதை எழுத ஒப்புக் கொண்டார்.

**முடிவுரை:**

- உ.வே.சா. அவர்கள் தமிழுக்கு செய்த தொண்டு அளப்பறியது, பல ஓலைச் சுவடிகளை தேடித்தேடி சேகரித்து அச்சேற்றினார்.
- எளியவரிடம் அவர் பழகும் பண்பும் போற்றுதற்குரியது.

30. **மாங்கல்யப் பிச்சை நாடகம் மூலம் அறியலாகும் கட்டபொம்மன் ஊமைத்துரையின் பண்பு நலன்களை எடுத்துரைக்க. (10).**

**முன்னுரை:**

- மாங்கல்யப்பிச்சை நாடகம் தொண்டைமான் அதிகார ஆசையில் கட்டபொம்மனையும், ஊமைத்துறையையும் கும்பெனியாரிடம் வஞ்சகமாக ஒப்படைத்த வரலாற்றை எடுத்துக் கூறுகிறது.
- ஊமைத்துரை கட்டபொம்மனின் சகோதரன் ஆவான். தொண்டைமான் கட்டபொம்மன் ஊமைத்துரை இருவரும் தலை மறைவாக வாழ்ந்து வருவதை அறிந்து விருந்து கொடுத்து அடைக்கலம் தருவதாய் கூறி அரண்மனைக்கு அழைக்கிறான்.

**ஊமைத்துரையின் சாதுர்யம்:**

- தொண்டைமானின் விருந்தை உண்ட பின் கட்டபொம்மனுடன் அறையில் ஓய்வெடுக்கும் போது ஊமைத்துரை மூக்கின் மேல் வீரன் ஒருவன் கைவைக்கும் போது ஊமைத்துரையின் கரங்கள் சாடிப் பிடித்து வீரனைத் தூக்கி எறிகின்றன.
- தூக்கத்திலும் விழிப்புடனே இருக்கும் ஊமைத்துரையின் சாதுர்யம் இதில் வெளிப்படுகிறது.

**சூழ்ச்சியை அறிதல்:**

- உண்டி கொடுத்து உறக்கம் கொள்ளும் போது உயிரைப் பறிக்கும் திட்டம் தீட்டிவிட்டார் தொண்டைமான் என அறிந்தான் ஊமைத்துரை.
- கட்டபொம்மனிடம், விருந்து கொடுத்து விழி மூடும் போது வெட்டிச் சாய்க்கத் திட்டம் தீட்டி விட்டார்கள்.

- **அண்ணா நான் விழித்திருந்ததால் நாம் பிழைத்தோம் என்று கூறுவதில் இருந்து ஊமைத்துரையின் சூழ்ச்சி அறியும் திறன் வெளிப்படுகிறது.**

**நாட்டுப்பற்று:**

- **கட்டபொம்மன் உண்டி கொடுத்தோரை வஞ்சிக்காதே என்றான். அதற்கு ஊமைத்துரை நம்பிக்கையால் அழிந்து போனது தமிழகம். நன்றியைக் கடைபிடிப்பதால் அழிந்து போகிறது தமிழகம்.**
- **இன்னுமா புல்லுருவிகளிடம் நம்பிக்கை வைக்கச் சொல்லுகிறீர்கள் எனக் கூறுகிறான்.**
- **தமிழக அரசரகளிடம் ஒற்றுமை இல்லாத காரணத்தாலேயே கும்பெனியர்கள் பெறுகிறார்கள்.**
- **நாம் ஒர் அன்னை வயிற்றில் பிறந்து ஒருவருக்கொருவர் துரோகம் செய்தாலேயே நாம் அடிமைப்பட்டு கிடக்கின்றோம் எனத் தாய் நாட்டின் பற்றை வெளிப்படுத்துகிறான் ஊமைத்துரை.**
- **கட்டபொம்மன் வீரனாயிருந்தாலும் நம் பண்பாட்டையும் பெண்களையும் பாதுகாப்பவனாக விளங்கினான்.**

**ராணியின் பரிசு:**

- **தொண்டைமானின் அரசி தன் தோழியின் மூலம் தன் மாங்கல்யத்தை பரிசாக கட்டபொம்மனுக்கு அனுப்புகிறாள். ஊமைத்துரை தொண்டைமானை கொல்லப் போவதாக சூளுரை செய்ததை கேட்டு அஞ்சிய ராணி இச்செயலை செய்கிறாள்.**

**கட்டபொம்மனின் பண்பு:**

- **கட்டபொம்மன், ராணியின் பொன் தாலிக்கு என்னாலோ என் தம்பியாலோ ஆபத்து ஒன்றும் இல்லை. நாங்கள் அக்கிரமக்காரர்கள் அல்லர். உண்ட வீட்டிற்கு என்றுமே துரோகம் செய்ய மாட்டோம் எனக் கூறி தோழியை அனுப்புகிறாள். இதிலிருந்து கட்டபொம்மனின் நல் மனம் புலனாகிறது.**
- **ஊமைத்துரை தன் அண்ணனிடம் தொண்டைமானின் உயிரை எடுக்க உத்தரவு வாங்க வருகிறான். அப்போது கட்டபொம்மன் என் சகோதரியின் மாங்கல்யமாக இதை எண்ணுகிறேன். பெண் அபலை என்னிடம் அபயம் வேண்டினாள். நான் அபயம் கொடுக்க வேண்டும் இது பாண்டி நாட்டுப் பண்பு ஆகும். உன்னுடைய உடைவாளை இடுப்பிலே செருகு என ஊமைத்துரையை சமாதானம் செய்கிறான்.**

**விரத்தை விட கொடை பெரிது:**

- **ஊமைத்துரை தன்னுடைய சபதம் வீணாக வேண்டுமா எனக் கேட்டபோது, கட்டபொம்மன் தம்பி நான் பெண்ணுக்கு என்றுமே எதிரிகள் அல்லர். அன்பின் அடிமைகள். நாம் நம்பிக்கை துரோகம் செய்தல் கூடாது. பெண்ணின் தெய்வம் அவர் கணவன் மட்டுமே. நீ கொல்லத் துடிப்பது விரோதியை அல்ல. ராணியாரின் தெய்வத்தை எனக் கட்டபொம்மன் கூறுகிறான்.**
- **வீரத்தை விடப் பெரிது கொடை. விரத்தை விட பெரிது தியாகம் தம்பி, நிமிர்ந்து நில் நம் பண்பு வெல்லட்டும் எனக் கூறி கட்டபொம்மன் ஊமைத்துரையுடன் வீரர்களிடம் சரணடைகின்றனர்.**

முடிவுரை:

- மாங்கல்ய பிச்சை நாடகத்தில் கட்டபொம்மனின் தியாக மான்பையும், ஊமைத்துறையின் வீரத்தையும், அரசியின் பதிபக்தியையும், கருணாகர தொண்டைமானின் சதிசெயலையும் அரிய முடிகிறது.
- கொடுத்த வாக்கிற்காக கைதான இரு வீரர்களின் வீர வரலாற்றைப் பற்றி நாம் அறிய முடிகிறது.

31. கல்கியின் படைப்புகள் யாவை?

பார்த்திபன் கனவு மகேந்திரவர்ம பல்லவன் வரலாற்றையும், சிவகாமியின் சபதம் நரசிம்மவர்ம பல்லவன் வரலாற்றையும், பொன்னியின் செல்வன் இராசராசனின் வரலாற்றையும், அலையோசை இந்திய - பாகிஸ்தான் பிரிவினையும் அதனால் எழுந்த சிக்கல்களையும் பேசும் வரலாற்று நாவல்களாகும்.

32. உ.வே.சா. பதிப்பித்த நூல்கள் யாவை?

உ.வே.சா. பதிப்பித்த நூல்கள் சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, புறநானூறு, பத்துப்பாட்டு, குறுந்தொகை, ஐங்குறுநாறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், அநேகர் பெயரளவில் மட்டும் கேள்விப்பட்டிருந்த பழந்தமிழ் இலக்கியங்களை அவர் கண்டுபிடித்து அச்சேற்றித் திருத்தமான உயர்ந்த பதிப்புகளாக வெளியிட்டுள்ளார்.

33. இறையன்பு பற்றி குறிப்பு எழுதுக.

தமிழ்நாடு அரசு இந்திய ஆட்சிப்பணி அதிகாரியாகப் பணியாற்றி வருபவர். இந்திய ஆட்சிப்பணி தேர்விற்கு தமிழை ஒரு விருப்பப் பாடமாகப் படித்து வெற்றி பெற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது. இளங்கலைப் பட்டத்தை வேளாண்மைத் துறையில் பெற்றவர். தமிழ் இலக்கிய பற்றுடையவர். சேலம் காட்டூரில் 1963 செப்டம்பர் 16-ல் பிறந்தவர்.

34. இறையன்புவின் நூல்கள் யாவை?

1. வாய்க்கால் மீன்கள் - தமிழ்நாடு அரசின் 1995 - ஆம் ஆண்டுக்கான சிறந்த கவிதை நூலுக்கான பரிசு பெற்றது.
2. ஓடும் நதியின் ஓசை - இரண்டு தொகுதி.
3. சின்னச்சின்ன வெளிச்சங்கள்.
4. உள்ளொளிப் பயணம்.
5. ஏழாவது அறிவு - மூன்று பாகம்.
6. முகத்தில் தெளிந்த சாரல்.
7. அரிதாரம்.
8. படிப்பது சுகமே.
9. அழகோ அழகு.
10. சாகா வரம்.
11. வேடிக்கை மனிதர்கள்.
12. நெஞ்சைத் தொட்டதும் சுட்டதும்.
13. திருப்பாவை திறன்.
14. போரின்றி வெற்றி.